# இயலிசை

தனி பிரதி விலை 0-50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

' இயலிசை '
57. தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம். சென்னை - 24

மலர் 2 15 - 2 - 84 இசைக்கலை தமிழ் மாதமிருமுறை - மாசி இதழ் இதழ் 19/20


திரை உலகுக்கு

## புதிய இசையமைப்பாளர்கள் !

### கண்ணன் - லதா ஜோடி !



மர்மயோகி, மணமகன், தேவதாஸ், லைலா மஜ்னு உட்பட பலபழைய வெற்றிப் படங்களுக்கு இசையமைத்து இளம்வயதிலேயே மறைந்தவர் சி. ஆர். சுப்பராமன். நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்தவர். அடி படங்களின் பாடல்கள் இன்றும் நினைவில்நிற்கின்றன. அவரது தம்பிதான் இன்று பிரபலமாக உள்ள சங்கர்-கணேஷ் இசையமைப்பாளர்களில் உள்ள சங்கர். சுப்பராமனின் மகன் கண்ணன் தனது மனைவி லதாவுடன் இசைக்குழு அமைத்து தமிழகம் இலங்கை முழுவதும் கிட்டத்தட்ட 1000 மெல்லிசை நிகழ்ச்சிகள் நடத்தியுள்ளனர். கண்ணன் தனது சித்தப்பா இசைக்குழுவில் வயலின் மற்றும் சில இசைக்கருவியாளராக 200 பாடல்கள் பதிவிற்கு பணியாற்றியுள்ளார்.

தற்பொழுது இந்த தம்பதியாருக்கு திரை உலகிலும் இசையமைப்பாளராகப் பணியாற்ற வாய்ப்புகள் கிடைத்துள்ளன. ஆறுபடங்களுக்கு இசையமைத்து வருகின்றனர். திரையில் கர்நாடக இசையை அதிகம் பயன்படுத்துவதை தாங்கள் விரும்புவதாக இயலிசை ஆசிரியரிடம் தெரிவித்தனர். அவர்களது பரம்பரை அறிவு, ஆர்வம், அடக்கம் இவை நல்ல எதிர்காலத்தை அமைத்துத்தரும் என்று நம்புகின்றோம்.
இவர்கள் விலாசம்: 7. சாரதாபுரம். 1வது தெரு. மயிலை, சென்னை-4.

## புரந்தரதாஸர் தினம்

### தியாகராஜ சங்கீத சமாஜம் கொண்டாடியது !

கர்நாடக மாநிலத்தில் ஏராள இசைப்பாடல்கள் இயற்றி அங்கு கர்நாடக இசையை வளர்த்தவர் புரந்தரதாசர். இவரது நினைவு நாளை 1-2-84 அன்று சென்னை ஸ்ரீ தியாகராஜ சங்கீத வித்வத் சமாஜம்மயிலையில்கொண்டாடியது திருமதி V. விஜயலட்சுமி கச்சேரியும் நடைபெற்றது.

இச்சமாஜம் தியாக பிரம்மத்தின் 137-வது ஆராதனை உத்சவத்தை ஜனவரி 21 முதல் 31 வரை கொண்டாடினர். ஏராள கலைஞர்கள் கலந்து பாடினர். வரும் 25-2-84 பஞ்சமியன்று திருமதி பத்மா கிருஷ்ணன் இசை நிகழ்ச்சியும் நடைபெற உள்ளது.

## திருமண வாழ்த்து !

பம்பாய் ராஜராஜேஸ்வரி பரத நாட்டிய கலாமந்திர் நடன ஆசிரியர் 'கலைமாமணி' T. K. மகாலிங்கம் பிள்ளையின் மகன் செல்வன் சிவக்குமாருக்கும் (State Bank of India) ஹைதராபாத் சுரேந்திரன் மகள் செல்வி சாதனாவிற்கும் 3-2-84 அன்று செகந்திராபாத்தில் திருமணம் நடைபெற்றது. மணமக்களுக்கு வாழ்த்துக்கள் !

## வலங்கைமான் மாசிப்பெருவிழா



தஞ்சை மாவட்டம் வலங்கைமான் மகா மாரியம்மன் திருக்கோவிலில் 7-வது ஆண்டு பச்சை சாற்றுதல் மாசிப் பெருவிழா வரும் மார்ச் 11, 12 தேதிகளில் நடைபெற உள்ளது. இவ்விழாவில் ஆண்டுதோறும் பிரபல நாதசுர, தவில் கலைஞர்களுக்கு பட்டமளிப்பு விழாவும் இரவு மறைந்த நாதசுர தவில் மேதைகளின் திரு உருவப் பட ஊர்வலமும் நடைபெறும். இவ்வாண்டு பட்டம்பெறுவோர். நாதசுரம் மன்னார்குடி M. S. பட்டாபிராமன், திருப்பாம்புரம் TKS சகோதரர்கள் தவில்: மன்னார்குடி M. S. வாசுதேவன் திருப்புன்கூர் T.G. முத்துகுமாரசாமி. விழா ஏற்பாடுகளை தவில் கலைஞர் வலங்கைமான் T.T. வேலு செய்து வருகின்றார். நன்கொடை வாழ்த்துகள் அனுப்புவோர் அவருக்கு அனுப்பவும்.

நாதசுரக் கலைஞர்கள்

## மதுரை MPN சகோதரர்களுக்கு விருது

### திருவையாறு தமிழிசை மன்றம் வழங்கியது

தஞ்சை மாவட்டம் திருவையாறு தமிழிசை மன்ற 13-வது ஆண்டு தமிழிசை விழா ஜனவரி 15, 16, 17 தேதிகளில் நடைபெற்றது. முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் தலைமை வகித்தார். மாவட்ட ஆட்சித் தலைவர் இரா. சத்பதி IAS, துவக்கிவைத்தார். இவ்வாண்டு விருது பெற்ற கலைஞர்களைப் பாராட்டி பட்டமளித்தார் இயலிசை நாடக மன்ற செயலாளர் D. V. நாராயணசாமி. சுந்தரபெருமாள் கோவில் கோ. ரெங்கசாமி மூப்பனார் அவர்களுக்கு பொன்னாடை போர்த்தினார். பூண்டி. கி. ஐயாறு வாண்டையார் பள்ளி மாணவிகட்கு பரிசு வழங்கினார். பாவலர் அரசு இயற்றிய "இன்னிசை நாற்பது" என்ற இசை நூலை தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழக துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்ரமண்யம் வெளியிட்டார். ஆண்டு விழா சிறப்பு மலரை கூட்டுறவுத் துறை இணைப்பதிவாளர் சு. பாலசுப்ரமணியம் வெளியிட்டார் தமிழிசை மன்ற நிர்வாகிகள் மற்றும் பலர் வாழ்த்துரை வழங்கினர்.



விருது பெற்ற கலைஞர்கள்

மதுரை M P N சேதுராமன், M P N பொன்னுசாமி - "பெருவங்கியக்கலையரசர்கள்" போழக்குடி P.V. கணேசன்—"பண்ணிசையரசு" திருவிடைமருதூர் இராமச்சந்திரராவ் — "வில்லிசை ஞானமணி" மணல்மேடு மாதவன்—'முகர் சங்கு ஞானமணி' நாச்சியார் கோவில் சிங்காரம்—'கஞ்சிரா கலைஞானமணி' தவில் தி. தெ. சிவகுருநாதன்—'இசைமாமுரசு' இவ்வாண்டு தமிழக அரசு 'கலைமாமணி' பட்டம்பெற்ற கலைஞர் திருச்சி பாரதன், நாதசுரம் கோட்டூர் N. நாகரத்தினம், N. வீராச்சாமி ஆகியோர் விழாவில் பாராட்டு பெற்றனர்.

மூன்று நாட்கள் நடைபெற்ற இசையரங்கில் ஏராள இசைக் கலைஞர்கள் கலந்து தமிழிசை வழங்கினர்.

மயிலையில்

## நடனக் கலை விழா

### நண்பர்கள் கலைக் கழகம் நடத்துகின்றது

சென்னை பிராட்வேயில் உள்ள நண்பர்கள் கலைக்கழகம் Friends Cutural Academy நகரத்திலே உள்ள பெரும் கலைச்சபைகளில் ஒன்று. இவர்கள் 1968-ல் ஒரு நடனக் கலை விழா நடத்தினர். தற்பொழுது மயிலை ரசிக ரஞ்சனி சபையில் தங்கள் இரண்டாவது நடனக் கலை விழாவினை 16-2-84 முதல் 22-2-84 வரை நடத்துகின்றனர். முதல் நாள் விழாவினை அமைச்சர் இராம. வீரப்பன் துவக்கி வைக்கிறார். அன்று லலித கலா அகடமி சென்னையின் செயலாளர் M. இராசாராம் அவர்களின் செல்வி ஜெயந்திஸ்ரீ நடனமாடுகின்றார். இவர் வழுவூர் R. சாம்ராஜின் மாணவி, பம்பாய் சகோதரிகள் பதங்கள் பாடுகின்றனர்.

தொடர்ந்து நடைபெறும் விழாவில் புது நடன மணிகள் கிரிஜா ராமன், இந்துமதி தோதாத்ரி, ரமா ராசப்பன், பிரபா அருமைதுரை, பேபி லட்சுமி சுகவனம். சந்திரா-சுமிதா, தீபா ராமனுதன், ஜெயகாளி ரகுவந்திரம், ஊர்மிளா சுதா விசுவநாதன் ஆகியோர் நிகழ்ச்சிகள் நடத்துகின்றனர்.

திருமதி சரசுவதி சுந்தரேசன் விழா ஏற்பாடுகளைச்செய்துள்ளார்.

## அநுதாபம்

பிரபல தொழிலதிபர்கள் வி.ஜி.பி. சகோதரர்களின் தாயார் திருமதி சந்தனம்மாள் மறைவு அறிந்து மிகவும் வருத்தமுற்றோம். அவரது குடும்பத்தினர் அனைவருக்கும் எங்கள் ஆழ்ந்த அநுதாபங்கள்.

—'இயலிசை'
நிர்வாகக் குழு

நாட்டியக் கலையரசி

## பாலசரசுவதி மறைவு !

சில நாட்களாக சர்க்கரை வியாதியால் அவதிப்பட்டு வந்த நடன மேதை திருமதி பாலசரசுவதி கடந்த 9-2-84 அன்று மாலை சென்னையில் மரணமடைந்தார். பிரதமர் இந்திரா காந்தி, தமிழக ஆளுநர் குரானா, முதல்வர் எம். ஜி. ஆர். மற்றும் பலர் அனுதாபச் செய்திகள் அனுப்பினர். ஏராள நடன இசைக்கலைஞர்கள் நேரில் வந்து அஞ்சலி செலுத்தினர். எம். எஸ். சுப்புலட்சுமி, டி. கே. பட்டம்மாள், பழம் பெரும் நடிகைகள் பத்மினி, வைஜெயந்திமாலா ஆகியோரும் வந்திருந்தனர்.

பாலசரசுவதி 1919-ல் பிறந்தவர். பரதநாட்டியம் முறைப்படி கற்று ஏராள நிகழ்ச்சிகளை நடத்தினார். வெளிநாடுகள் பல சென்று வந்துள்ளார். 1955ல் தமிழக அரசு விருதும், 1957ல் இந்திய அரசின் பத்மபூஷன் பட்டமும், 1975-ல் மியூசிக் அகடமி சங்கீத கலாநிதி பட்டமும் பெற்றவர். சென்னையில் பரதநாட்டியப்பள்ளி நடத்தி வந்தார். மியூசிக் அகடமியின் தலைவராக இருந்து வந்தார். பரத நாட்டியம்பற்றி பல நூல்களை எழுதியுள்ளார். இவரைப்பற்றி வங்காள திரை இயக்குநர் ஒரு செய்திப்படம் தயாரித்து வெளியிட்டுள்ளார்.

இன்று இசைத்துறையில் பிரபலமாக உள்ள புல்லாங்குழல் டி. விசுவநாதன், பிருந்தா-முக்தா, வேகவாகினி விஜயராகவன், சென்னை தமிழிசைக் கல்லூரி முதல்வர் டி. சங்கரன் ஆகியோர் இவரது குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

இளம் இசைக்குயில்

## காஞ்சிபுரம் சீதாகுமாரி !



கலையழகு பொருந்திய காஞ்சிபுரத்தில் வாழும் 14 வயதே நிரம்பிய சிறுமி சி. ஆர். சீதாகுமாரி தனது இனிய குரலில் அழகாகப் பாடி கச்சேரிகளை செய்து வருகின்ருள். இவளது தந்தை C. R. இராமச்சந்திரன் சின்னகாஞ்சிபுரத்தில் பிரபலமானவர். இசை மேதை காலஞ்சென்ற நயினபிள்ளை பரம்பரை சீடர்களிடம் சிறுவயது முதல் இசை பயின்று இன்று 200க்கும் மேற்பட்ட மேடைகளில் தனது இசைத் திறனைக் காட்டி வளர்ந்து வருகின்ருள். இவளது இசையைக் கேட்டு காஞ்சிபுரம் புதுப் பெரியவர், திருமுருக கிருபானந்தவாரியார், டாக்டர் பாலமுரளிகிருஷ்ண, சௌந்தரம் கைலாசம் உட்பட பலர் பாராட்டியுள்ளனர். சமீபத்தில் திருவையாறு தியாகப்பிரம்ம உற்சவத்திலும் பாடி ரசிகர்கள் பாராட்டினைப் பெற்ருள். 'இயலிசை'யும் வாழ்த்துகின்றது.

### ஆசிரியருக்கு கடிதம்

எங்கள் சங்க செய்தியினையும் தங்கள் இதழில் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தோம். எங்களுக்கு தாங்கள் தக்க ஆதரவும் ஆலோசனையும் வழங்கவேண்டும்.

வாழ்க இயலிசை !
வளர்க அதன் தொண்டு !

நாதசுரம் N. ராமு,
பெரியகள்ளிப்பட்டு
தெ. ஆ. மாவட்ட
நாதசுர தவில் கலைஞர்கள் சங்க
செயலாளர்

புதுக்கவிதை



## நிருத்ய நாயகி

அரங்கத்து நாயகியாம் அன்புக்கோர் கலைஞராம்
ஆற்றோட்டம் போன்றே ஆடிவரும் அணங்காம்
இந்நிலத்தே நாளும் வண்ணக்கலை பரப்பி
ஈன்றவர் நெஞ்சைக் குளிரவைக்கும் பாவையாம்
உள்ளுவ தெல்லாம் உயர்வாக எண்ணி
ஊரார் தன்னில்லம் வந்தால் விருந்தோம்பி
எட்டுத் திசையிலும் நடனக்கலை பரப்பி
ஏட்டுப் படிப்பில் டாக்டர் பட்டமும்
ஐம்புலன் ஒடுக்கும் தெள்ளிய நிருத்யமும்
ஒருங்கே பெற்ற இனியதோர் கன்னியாம்
ஓங்கு புகழ் நினக்கே சொந்தமாய்
ஒளவை பாட்டுக்கும் ஆடலைக் கண்டு
இந்திய அரசின் அகாடமி பரிசு
இனிதே பெறும் எங்கள் பத்மாவே
வாழிய நலம் எல்லாம் பெற்று
வாழிய வாழியவே?

''கலைமதி''
சோ. சேசாசலம், B.A., B.L.
சென்னை-82.

## கவிஞர்களே !



விழுப்புரம் நகரில் உள்ள அருள்மிகு ஆஞ்சநேயர் மிகவும் பெயர்பெற்றவர். ஆண்டுதோறும் தமிழ் வருடப் பிறப்பன்று அவருக்கு இலட்சதீபப் பெருவிழா நடைபெறும். பக்தர்கள் ஆயிரக்கணக்கில் கூடுவார்கள். அவருக்கு இவ்வாண்டு ஒரு சிறு பாடல் புத்தகத்தைக் காணிக்கையாகச் செலுத்த 'இயலிசை' விரும்புகின்றது. இதற்கு திருக்கோவில் பரம்பரை அறங்காவலர் திரு V. கனகசபை ஆதரவு தர உள்ளார். கவிஞர்கள் ஆஞ்சநேயர்மீது கவிதைகள் (பாடல்கள்) எழுதி உடனே 'இயலிசை'க்கு அனுப்ப வேண்டுகின்ரும். சிறந்த கவிதைகளுக்கு பரிசும் உண்டு.

—ஆசிரியர்

## கரூரில் இசை விழா

திருச்சி மாவட்டம் கரூரில் பல ஆண்டுகளாக சிறப்புடன் நடைபெற்றுவரும் நாரத கான சபையின் 40-வதுஆண்டு விழா 17-2-84 முதல் 26-2-84 வரை நடைபெற உள்ளது. விழாவினை சென்னை மியூசிக் அகடமி தலைவர் டி. டி. வாசு தலைமையில் மாவட்ட ஆட்சியாளர் திரு. பி. நடேசன் I A S துவக்கி வைக்க உள்ளார்.

திருமதி ஷோபனு ரெங்காச்சாரி டி.வி. சுந்தரவல்லி, மகாராஜபுரம் சந்தானம் இசை நிகழ்ச்சிகளும், எச். ஆர். சாஸ்திரி குழுவினர் புல்லாங்குழல், மாஸ்டர்கள் கணேஷ், குமரேஷ் இருவயலின் நிகழ்ச்சிகளும், திருமதி. மாலதி டாம்னிக் ஷோபனு ரங்காச்சாரி, செல்வி கே. சைலஜா, திருச்சி சகோதரிகள் என். ஸ்ரீதேவி & ஜி. மங்கை இவர்கள் நடன நிகச்சிகளும், காத்தாடி இராமமூர்த்தி குழுவினர் நாடகங்களும் இவ்விழாவில் நடைபெறஉள்ளன.

## 'சுருதி' இசைக்கலை ஆங்கில இதழ்!

இசைக்கலைக்கென்றே ஒரு தனித்தமிழ் இதழாக 'இயலிசை' கடந்த இரண்டு ஆண்டுகளாக வெளிவந்து பணியாற்றிக்கொண்டிருப்பது தெரிந்ததே, தற்பொழுது தென்னிந்திய இசைக்கலைப் பணிக்காக ஆங்கிலத்தில் 'சுருதி' என்ற மாத இதழை ஆரம்பித்து கடந்த விசயதசமி அக்டோபர் 83 முதல் வெளியிடுகின்றனர். இதற்கு பழம்பெரும் பத்திரிகையாளர் பி. என். சுந்தரேசன் வெளியீட்டாளர் வெளிநாட்டு பத்திரிக்கை தொடர்பாளரான என். பட்டாபிராமன் ஆசிரியராக பணியாற்றுகின்ருர். மிக உயர்ந்த முறையில் அச்சிடப்பட்டு வெளிநாடுகளிலும் விற்பனையாகின்றது. இசைத்துறைபற்றி நல்ல கட்டுரைகள் செய்திகள் இடம் பெறுகின்றன. தனியிதழ் ரூ. 5/- ஆண்டு சந்தா ரூ. 60/-.

'சுருதி'க்கு நமதுவாழ்த்துக்கள்!

## நலிந்து வரும் நாதசுரக்கலை!

தமிழகத்தின் தனிப்பெருங்கலைகள் நாதசுரமும் நாட்டியமும் ஆகும். உலகில் இந்தியாவிற்கே இவை இரண்டும்பெருமை சேர்த்து தருகின்றன. இவை முறையே பெரிய மேளம், சின்ன மேளம் என தமிழக மக்களால் போற்றி வளர்க்கப்பட்ட கலைகள். நாட்டியத்திற்காவது சொந்தங் கொண்டாடி சிலர் வந்தனர். கற்பனையாக சில ஆதாரங்களைக் காட்டினர். நாதசுரத்திற்கு சொந்தங் கொண்டாடி வரக்கூட எவருக்கும் தெம்பில்லை.

இன்று நாட்டியக்கலை பலவித காரணங்களால் செல்வாக்கு பெற்றுள்ளது. நாதசுரக்கலை நிலைதான் நம்மைச் சிந்திக்க வைக்கின்றது. இத்தனைக்கும் நாதசுரம் நமது வாழ்க்கையில் பல நேரங்களில் தேவைப்படும் இசைக்கருவியாக உள்ளது. மேளம் இல்லாத கல்யாணமா — திருவிழாவா? ஒரு பெரிய மனிதரை அழைத்தால்கூட மேளம் வைத்து அழைப்பதைத் தானே பெருமையாக எண்ணுகின்றோம்.

ஆயினும் இக்கலைஞர்களின் நிலை என்ன? ஏராள நாதசுரக் கலைஞர்கள் வறுமையில் வாடுகின்றனர். தங்களது குழந்தைகளையும் இக்கலையில் போதிய வருமானம் இல்லாததால் அதில்விடுவதில்லை. தமிழக அரசு இசைக்கல்லூரிகளிலும் இப்பிரிவில் மாணவர்கள் குறைவே. மதுரை இசைக்கல்லூரியில் அப்பிரிவு இயங்கவேயில்லை. திருக்கோயில்கள் ஆதரவில் நடைபெறும் நாதசுர பள்ளிகளிலும் இதே நிலைதான்.

தமிழகத்தில் இக்கலைஞர்களுக்கு உரிய மரியாதையும் கிடையாது. திருக்கோவில்களில் பணியாற்றும் நாதசுரக் கலைஞர்கள் ஊதியத்தை வெளியே சொல்ல அவர்களே வெட்கப்படுவார்கள். நாதசுர தவில் இசைக்கலைஞர்கள் முக்கிய நிகழ்ச்சிகளுக்கு செல்லும்பொழுது கூட அக்கருவிகளை ஏற்ற போக்குவரத்து துறைப் பேருந்துகள் மறுக்கின்றன. அல்லது தனிக்கட்டணம் கேட்கின்றனர். இதனைக் கண்டித்து பல மாவட்ட இசை வேளாளர்கள், தவில் நாதசுரக் கலைஞர்கள் சங்கங்கள் போக்குவரத்து கழகங்களுக்கு கடிதங்கள் எழுதியுள்ளன. 'இயலிசை' இதழிலும் செய்திகள் வந்துள்ளன. சமீபத்தில் நடைபெற்ற தென்னாற்காடு மாவட்ட நாதசுர தவில் கலைஞர்கள் பண்ருட்டி கூட்டத்திலும்இதுபற்றி தீர்மானம் போட்டுள்ளனர்.

இசைவிழாக்களை நடத்தும் இசைச்சபைகளும் நாதசுர இசை நிகழ்ச்சிகளுக்கு மிகவும் குறைவான வாய்ப்புக்களே தருகின்றனர். சென்னை தமிழிசைச் சங்கத்தில் கூட மேளக்கச்சேரிகள் குறைந்துவிட்டன.

எல்லாவற்றையும்விட இக்கலைக்கு தமிழகத்தில் இழைக்கப்படும் அநீதி—

இவ்வளவு தொன்மை சிறப்பு கவர்ச்சி பெற்ற கலைக்கு தமிழக வானொலி நிலையங்களில் நிரந்தர ஊழியர் கிடையாது. வடநாட்டு இசைக்கருவி சித்தாருக்குகூட தமிழக வானொலி நிலையங்களில் நிரந்தர ஊழியர் உண்டு!

தமிழகம் சிந்திக்க வேண்டும். சம்பந்தப்பட்டவர்கள் கவனிக்க வேண்டும்.

## 'திருவருட்பா' இசைச்சுட்டி வெளியீடு



திரை இசையமைப்பாளர்கங்கை அமரன் இசையமைப்பில் தஞ்சை சரசுவதி சீனுவாசன் பாடிய திருவருட்பா இசைச்சுட்டியினை Cassette அமைச்சர் மாண்புமிகு சி. பொன்னையன் தலைமையில் சட்டப்பேரவைத் தலைவர் க. இராசாராம் சென்னை மயிலை பைன் ஆர்ட்ஸ் அரங்கில் 14-2-84 அன்று வெளியிட்டார். இதனை எக்கோ ரிகார்டிங் நிறுவனம் பதிவு செய்திருந்தது. பலரும் கலைஞர்களுக்கு வாழ்த்துரை வழங்கினர். விழாவில் தஞ்சை மிருதங்க வித்வான் T.P. நாகராஜன் பாராட்டப் பெற்றார். தமிழக சட்டத்துறை இணைச் செயலாளர் V. முருகன் புதல்வராகிய செல்வன் பாக்யராஜ் திரு அருட்பா இசை அரங்கேற்றமும் அன்று நடைபெற்றது.

திருவருட்பா முதலில் இசைச்சுட்டியில் (Media Cassette) திருவருட்பா தேனிசை என சிதம்பரம் மீனாட்சிசுந்தரம் பாடி வெளிவந்தது. பின்னர் செல்வி பிரமிளாவும் பாடி (AVM Cassette) வெளிவந்துள்ளது.

## கீர்த்தி இசைச் சுட்டி
## கருமாரியம்மன்
### அந்தாதி வெளியீடு



திருப்புகழ் இசைச்சுட்டி பாடியுள்ள திருமதி ஜெயமாதங்கிவிசுவநாதன் பாடிய ஸ்ரீதேவி கருமாரி அம்மன் அந்தாதி பாடல்களை L. R. சுவாமியின் கீர்த்தி இசைச் சுட்டியில் (Keertii Cassettes) பதிவு செய்து வெளியிட்டுள்ளார்கள். பாடல்களை இயற்றியவர் கவிஞர் இலந்தை இராமசாமி இதனை சென்னை தேனாம்பேட்டை L. R. சுவாமி கட்டிடத்தில் 23-1-84 அன்று மாலை திருவேற்காடு சுவாமி இராமதாசர் வெளியிட சென்னை தொலைபேசி பொது மேலாளர் K. C. இராமதாசு விவேக் & கம்பெனி B.A. சந்திரசேகர் ஆகியோர் பெற்றுக்கொண்டனர் L. R. நாராயணன் நன்றியுரை ஆற்றினர்.

## விஜிபி தங்கக் கடற்கரையில் பொங்கல் விழா

ஆண்டுதோறும் விஜிபி சகோதரர்கள் விஜிபி தங்கக் கடற்கரையில் பல கலை நிகழ்ச்சிகளோடு மக்களைக் கவரும் வகையில் பொங்கல் விழா கொண்டாடி வருகின்றனர். இந்த ஆண்டும் விஜிபி தங்கக் கடற்கரையில் பல கிராமியக் கலை நிகழ்ச்சிகளும். இசை நிகழ்ச்சிகளும் 14ந் தேதி முதல் 17ந் தேதி வரை நான்கு நாட்கள் பொங்கல் விழாவையொட்டி நடைபெற்றன.

நிதி அமைச்சர் நெடுஞ்செழியன் தொழில்துறை அமைச்சர் திருநாவுக்கரசு. சுகாதார அமைச்சர் ஹண்டே. சட்டமன்றத் தலைவர் க. இராசாராம் ஆகியோர் இவ்விழாவில் கலந்து கொண்டு. கலை நிகழ்ச்சிகளைக் கண்டு ரசித்தனர்.

சுடர்க்கொடி பத்மா, செல்வி மகாராணி, ஜெயலட்சுமி, சிஜடி சகுந்தலா குழுவினர் ஆகியோரின் நடன நிகழ்ச்சிகள், கலைமணி குழுவினரின் புரவி ஆட்டம், போலீஸ் பாண்டு இசை, தமிழ்நாடு விசேஷ காவல் துறையினரின் காவடி, கரக ஆட்டம், தீ விளையாட்டு மற்றும் மாஜிக்ஷோ, கழைக்கூத்து இன்னும் பல நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

இந்த நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்த விஜிபி சகோதரர்களையும், இந்த நிகழ்ச்சிகளில் கலந்து கொண்ட கலைஞர்களையும் அமைச்சர் நெடுஞ்செழியன் பாராட்டினார் ஆண்டுதோறும் பல கலைஞர்களை அழைத்து. நிகழ்ச்சிகளுக்கு வாய்ப்பு கொடுத்து, அவர்களை விஜிபி சகோதரர்கள் ஊக்குவித்து வருவதைக் குறிப்பிட்டு தனது வாழ்த்துக்களை தெரிவித்தார்.

TN/MS (S) 260
'NALLISAT' Musical Bi-Monthly Printed by T. Thiruuavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani Madras-26. Published & Edited by M. Lakshmi, 57 South Sivan Koil Street, Kodambakkam, MADRAS-600 024.




தி. இராமநாதன்,
18, 4வது பிரதான சாலை
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை-28

கலைத் தொடர்கதை

# ஆடலரசி அபிராமி

## 13. பாகவதர் தந்த விளக்கம்

உலகில் எத்தனையோ விதமான ஒலிகள் உள்ளன. வெறும் ஒலியை ஏதோ சத்தம்-இரைச்சல்-ஓசை என்கிறோம். அதுவே ஒழுங்குப் படுத்தப்பட்டு ஒலித்தால் இசை என்கிறோம். ஒலியை அதாவது ஓசையை ஒழுங்குப்படுத்த முதலில் அதனைப்பிரித்து பின்னர் எழுப்ப வேண்டும்.

ஒளி நேராகச் செல்லக்கூடியது. ஒலி வட்டமாகப் பரவிச் செல்லக் கூடியது. அந்த வட்டத்தைப் பிரிக்கும்கால — முதல் கட்டமும் கடைசி கட்டமும் ஒரே கோட்டில் — ஒரே இடத்தில் சேருகின்றது. இதைத்தான் கீழ் சட்ஜமம், மேல் சட்ஜமம்-தமிழில் கீழ்நிலைக்குரல் மேல்நிலைக்குரல் என்கின்றோம். குரல்கள் சேரும் பொழுது சுருதி சேருகின்றது. என்கிறோம்.

ஒரு வட்டத்தை எத்தனையோ பகுதிகளாக கட்டங்களாக பிரிக்க முடியும் என்றாலும் நமது முன் னோர்கள் திருவருள் சம்மதத்துடன் 12 பகுதிகளாகத்தான் பிரித்து பெயரிட்டனர். ஒலி வட்டத்தை 12க்குமேல் இதுவரை எந்த மேதா வியும் பிரித்து பார்க்கவில்லை. அதற்கு ஏராள காரணங்களும் உண்டு. நமது மனித அறிவுக்கு எட்டிய இயல்பான பிரிவுகள் 12தான். எவ்வளவோ விதமான மனிதர்கள் இருப்பினும் 12 ராசி களால் மட்டும் ஜோதிட வல்லுநர் கள் பிரித்து அவர்களது காலத் தைக் கணிக்கின்றனர் அல்லவா இப்பன்னிரண்டு பிரிவுகள்தான் **சரிகமபதநி** என்ற ஏழு சுரங்களும் **ரிகமதநி** என்று 5 பிரதி சுரங் களும் ஆகும்.

அழிந்துவிட்ட பழம்பெரும் இசைநூல்களான முதுநாரை, முதுகுருகு. சிகண்டியார். இசை நுணுக்கம். பஞ்சபாரதீயம் என்ற நூல்களிலும், 12ம் நூற்றாண்டில் வடமொழியில் சாரங்கதேவரால் எழுதப்பட சங்கீத ரத்னாகரம்என்ற இசை நூலிலும் பின்னர் பல மொழிகளிலும் எழுதப்பட்ட இசை நூல்களிலும் 12 சுரங்கள் தவிர வேறு சொல்லப்படவில்லை. இந்த அமைப்புப்படி 32 தாய் ராகங்களே. கர்த்தா ராகங்களே நடைமுறை யில் இருந்து வந்துள்ளன.

கி.பி. 1638ல் சோழ நாட்டை ஆண்ட விஜயரெகுநாத பூபால மகாராஜாவின் மந்திரியாக இருந்த வெங்கடேசுவர தீட்சதர் என்ற வெங்கடமகி இசை ஞானம உடையவராக இருந்தார். இவர் இசைக்கலையில் ஆய்வு செய்து 12 சுரங்களிலேயே **ரிகதநி** ஆகிய 4 சுரத்திற்கு வேறு பெயர்களும் கொடுத்து — அதாவது ஒரு தொனிக்கு இரண்டு பெயர்கள் கொடுத்து எண்ணிக்கையில் 16 சுரங்கள் ஆக்கினார். இதன்படி கர்த்தா ராகங்கள் 72 ஆக்கினார். இவ்வாறு செய்து 'சதுர்த்தண்டிப் பிரகாசிகை' என்று ஓர் இசை நூல் செய்தார். அவரது காலத் திலும் பின்னரும் இந்த அபிப் பிராயத்திற்கு — 72 ராக எற் பாட்டிற்கு பலத்த எதிர்ப்பு இருந் திருக்கின்றது. எனினும் அரச செல்வாக்காலும் - இதர காரணங் களாலும் அவரது ஏற்பாடு பெய ரளவில் இசை உலகில் ஏற்கப் பட்டு இன்றும் ஏட்டளவிலும்— ஓரளவு பாட்டளவிலும் உள்ளது.

இவருக்கு பின் 100 வருடங்கள் கழித்து தோன்றியவர் தியாகப் பிரம்மம். அவர் 32 கர்த்தா ராகங்களிலும் அதன் கிளை ராகங் களிலும் ஏராள பாடல்கள் கீர்த் தனங்களைப் பாடியிருப்பினும் வெங்கடமகி புதிதாக சொல் லப்பட்ட 40 ராகங்களில் கீர்த் தனங்கள் பாடவில்லை என்பது ஞானமுள்ளவர்கள் அனைவரும் தெரிந்துகொள்ளவேண்டிய உண் மையாகும். அவராலும் அவரது பரம்பரைச் சீடர்களாலும் பாடாந் திரம் தவறாது பாடப்பட்டுவந்த கீர்த்தனங்களில் சிலவற்றை எடுத்து 19-ம் நூற்றாண்டு இறுதி யில் சிலர் வெங்கடமகியின் 40 இராகங்களில் மாற்றினர். அவ் வாறு மாற்றிய விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| எண் | கீர்த்தனை பெயர் | தியாகப்பிரம்பம் பாடிய இராகம் | மாற்றப்பட்ட இராகம் |
|---|---|---|---|
| 1. | எமந்துனே | ஸ்ரீமணி (அருமத தோடி) | ஸ்ரீமணி (ரத்னாங்கி) |
| 2. | பரிகாசமாட்ட | நாடகப்பிரியா | வனஸ்பதி |
| 3. | எவரிதேச | கோகிலப்பிரியா | மானவதி |
| 4. | நேமொரபெட்டிதேர் | ,, | ரூபவதி |
| 5. | பராகுஜேசினா | சுஜாவூலி (சக்ரவாகம்) | சுஜாவூலி (காயகப்பிரியா) |
| 6. | பணிபதிசாயி | நடபைரவி | ஜங்காரத்வனி |
| 7. | ஏமனிபொகடுதுரா | வீரவசந்தம் (கௌரி மனோகரி) | வீரவசந்தம் (வர்ணப்பிரியா) |
| 8. | மனசாஸ்ரீ | சாருகேசி | மார ரஞ்சனி |
| 9. | சத்தலேனி | தீரசங்கராபரணம் | நாகநந்தினி |
| 10. | எவ்வரே | சரசாங்கி | காங்கேய பூஷணி |
| 11. | பரமாத்முடு | அரிகாம்போதி | வாகதீஸ்வரி |
| 12. | பிராணநாத | தீரசங்கராபரணம் | சூலினி |
| 13. | நின்னே | நாட்டை (தீரசங்கராபரணம்) | நாட்டை (சலநாட்டை) |
| 14. | மரகதமணி | வராளி (சுப்பந்துவராளி) | வராளி (ஜாலவராளி) |
| 15. | லேமிதெல்ப | சட்விதமார்க்கனி | நவநீதம் |
| 16. | வரநாரதநாராயண | விஜயஸ்ரீ (சுவர்ணாங்கி) | விஜயஸ்ரீ (பாவனி) |
| 17. | லீலகானு | துந்துபி(சுவர்ணாங்கி) | துந்துபி (திவ்யமணி) |
| 18. | நிசித்தமு | விஜய வஸந்தம் (கமனஸ்ரியா) | விஜய வஸந்தம் (விஸ்வாம்பரி) |
| 19. | வாசாமகோசர | கைகவசி (தர்மவதி) | கைகவசி (நீதிமதி) |
| 20. | பாலந்துவையா | ரிஷபப்பிரியா | காந்தாமணி |

குறிப்பு: சேய்ராகங்களாக—ஜன்யராகங்களாக இருந்தால் அடைப்பில் அவற்றின் தாய்ராகங்கள் கர்த்தாராகங்கள் கொடுக்கப் பட்டுள்ளன,

இசை உலகில் அன்றிலிருந்து இன்றுவரை 72-32 கர்த்தாராகங் கள் சர்ச்சை இருந்து கொண்டுள் ளது. திடீரென்று கிளம்பும்பின்னர் அடங்கிவிடும், எப்படி இருப்பினும் 32 ராக அமைப்பே சரி என ஒத்துக் கொள்ளும் கலைஞர்கள் இன்றும் உள்ளனர்.

நமது கதாநாயகனின் ஆசிரியர் திருவையாறு ராசகோபால் பாக வதருக்கு 32ம் தெரியும். 72ம் தெரியும். அவர் ஒத்துக்கொள்ளா தது தியாகப் பிரம்மம் 72 மேள கர்த்தாவில் கீர்த்தனம் செய்தார் என்ற கருத்தைதான். அவருக்கு அப்படி எதும் பாடம் கிடையாது. தியாகப்பிரம்பம் மீது அளவுகடந்த பக்தி வைத்துள்ள அவருக்கு இது போன்று அவர் பெயரில் தவறு நடப்பதைக் கேட்கவே விரும்ப வில்லை. எனவேதான் கல்யாணம் சொன்னதைக் கேட்டு சினப் பட்டார்.

அவரது விளக்கம் மற்ற மாண வர்களுக்கெல்லாம் முழுதும் புரிந்ததோ இல்லையோ சாமி நாதனுக்கு நன்கு புரிந்தது. அவனுக்கு வயிறு நிறைய சாப் பிட்டதுபோல இருந்தது. கல்யாணத்திற்கு — சாமிநாதன் பெரிய விஷயத்தை குருவிடம் நம் மூலம் கேட்டுத் தெரிந்து கொண் டான் என்பது மட்டுமேபுரிந்தது.

இதுவரை தன்னை மறைத் திருந்த சாமிநாதன் தன்னையும் அறியாமல் வெளிப்படையாக தன் குருவிடம் ஒரு கேள்வி கேட்டான்.

''அப்படியானால் வெங்கட மகியின் 72 ராகங்கள் கருத்தை தியாகப்பிரம்பம் ஏற்றுக் கொள்ள வில்லையா'' என்று கேட்டான்.

இப்பொழுது பாகவதருக்கு விஷயம் புரிந்துவிட்டது. சுவாமி நாதன் தன் வாயைக் கிளறுகிறான் என்று தெரிந்து கொண்டார். என்றாலும் தக்கபதில் சொல்லாது இருப்பது தனக்கு சரியில்லை என மற்றொரு விளக்கம் தர ஆரம்பித் தார்.

(தொடரும்)



★

செல்வி;
ஸ்ரீநிதி ரங்கராஜன்

★

குறிப்பு: 'ஆடலரசி அபிராமி' கதையில் இந்த இதழில் வந்துள்ள கருத்துக்களுக்கு ஏராள இசை நூல்கள் ஆதாரம் உண்டு. குறிப்பாக மதுரை நாதசுரம் M.K.M. பொன்னுசாமி பிள்ளையவர்கள் 1930ல் எழுதிய **'பூர்விக சங்கீத உண்மை'** என்ற புத்தகத்தில் ஏராள குறிப்புகள் எடுக்கப்பட்டுள்ன.